නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

85 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ගෘහ ආර්ථික විද්‍යාව I, II
மனைப் பொருளியல் I, II
Home Economics I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

## மனைப் பொருளியல் I

**கவனிக்க :**

(i) **எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.**
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** ஓர் எளிய காபோவைதரேற்று
(1) மோல்ற்றோசு (2) செலுலோசு (3) கலக்றோசு (4) சுக்குரோசு

**2.** பின்வருவனவற்றுள் குறைந்தளவு புரதத்தைக் கொண்டது
(1) சிறகவரை (2) இறைச்சி (3) பருப்பு (4) பால்

**3.** ஒரு பல் நிரம்பாதக் கொழுப்பமிலம்
(1) லோரிக்கமிலம் (2) ஒலிக்கமிலம் (3) லினோலெயிக்கமிலம் (4) பியூத்திரிக்கமிலம்

**4.** 10 கிராம் மாஜரினின் சக்திப் பெறுமானம்
(1) 40 கிலோகலோரி (2) 55 கிலோகலோரி (3) 70 கிலோகலோரி (4) 90 கிலோகலோரி

**5.** விலங்கு உணவுகளில் அடங்கியுள்ள விற்றமின் A இனங்காணப்படுவது
(1) ரெற்றினோல் என (2) கொலிகல்சிபெரோல் என
(3) பீற்றா கரோட்டின் என (4) ரொகோபெரோல் என

**6.** விற்றமின் $B_6$ என்பது
(1) நயசின் (2) பிரிடொக்சின் (3) இரைபோபிளேவின் (4) தயமின்

**7.** சிபாரிசு செய்யப்பட்ட போசணைத் தேவை அட்டவணையில் தேவைப்பாடு கிராம்களில் குறிப்பிடப்பட்டுள்ள போசணைப்பொருள்
(1) புரதம் (2) இரும்பு (3) கல்சியம் (4) விற்றமின் C

**8.** உணவுக் கூம்பகத்தில் முறையே கீழிருந்து மேலாக அடங்கியுள்ள சில உணவுப்பொருட்கள் ஆவன
(1) தானிய உற்பத்திகள், பால் உற்பத்திகள், பயறு, சீனி
(2) கிழங்கு வகைகள், பால், மீன், கொழுப்புகள்
(3) தானியங்கள், மரக்கறிகள், இறைச்சி, சீனி
(4) கிழங்கு வகைகள், முட்டை, பழங்கள், கொழுப்புகள்

**9.** 'A' என்னும் உணவுப்பொருள் தொடர்பான சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
- முளைகொள்ளக் கூடியது
- புரதத்தின் ஒரு முதலாகும்.
- லெகுமின் அடங்கியது.
- பருப்பு வகை ஒன்றாகும்.

'A' ஆக இருக்கக்கூடியது
(1) சோளம் (2) பாசிப்பயறு (3) கோதுமை (4) நிலக்கடலை

[பக். 2 ஐப் பார்க்க.

10. இறைச்சியிலும் பாலிலும் அடங்கியுள்ள புரதங்கள் முறையே
(1) மயோசின், கேசின் ஆகியன (2) குளூட்டன், இலாஸ்ரின் ஆகியன
(3) குளோபியூலின், அல்பியுமின் ஆகியன (4) அவிடின், கொலாஜன் ஆகியன

11. திண்மக் குழையல் மாவினால் தயாரிக்கப்பட்ட ஓர் உணவு
(1) கொக்கிஸ் (2) கேக் (3) பற்றிஸ் (4) பணிஸ்

12. காலை உணவு வேளையொன்று கீழே தரப்பட்டுள்ளது.
- இடியப்பம்
- உருளைக்கிழங்கு கறி
- தேங்காய்ச் சம்பல்
- ஒரு குவளைப் பால்

இவ்வுணவு வேளையில் அடங்கியுள்ள சில போசணைப்பொருள்கள்
(1) நிறை புரதம், காபோவைதரேற்று, கல்சியம் (2) காபோவைதரேற்று, கொழுப்பு, விற்றமின் C
(3) நிறை புரதம், இரும்பு, கொழுப்பு (4) காபோவைதரேற்று, இரும்பு, விற்றமின் E

13. மந்தபோசணையில் 'தேய்வடைதல்' என்னும் நிலைமை இனங்காணப்படுவது
(1) வயதுக்கேற்ற உயரம் இன்மை மூலம்
(2) உயரத்துக்கேற்ற நிறை இன்மை மூலம்
(3) வயதுக்கேற்ற நிறை இன்மை மூலம்
(4) வயதுக்கேற்ற நிறையும் உயரமும் இன்மை மூலம்

14. குருதிச்சோகையின் ஓர் அறிகுறி
(1) வீங்குதல் (2) வயிற்றோட்டம் (3) களைப்பு (4) மலச்சிக்கல்

15. பின்வரும் பெறுமானங்களில் கொழுத்த உடல் நிலைமையைக் காட்டும் உடற் திணிவுச் சுட்டிப் பெறுமானம்
(1) 20 (2) 23 (3) 27 (4) 32

16. புரதத்தைச் சமிபாடடையச் செய்யும் ஒரு நொதியம்
(1) அமைலேசு (2) பெப்ரிடேசு (3) இலிப்பேசு (4) சுக்குரேசு

17. பின்வருவனவற்றுள் pH பெறுமானம் குறைவடைவதன் மூலம் நற்காப்புச் செய்யப்படும் உணவு எது?
(1) மாங்காய் ஜேம் (2) கருவாடு (3) உருளைக்கிழங்கு ரொபி(4) மலே அச்சாறு

18. பின்வரும் கூற்றுகளுள் பெண்களின் இனப்பெருக்கத் தொகுதித் தொடர்பான சரியான கூற்று எது?
(1) ஒரு மாதத்தில் இரு சூலகங்களின் மூலமும் ஒவ்வொரு முதிர்ந்த சூல் விடுவிக்கப்படும்.
(2) சூல் கொள்ளலுடன் மாதவிடாய் ஆரம்பிக்கும்.
(3) முதிர்ந்த சூல்களை வைத்திருத்தல் பலோபியன் குழாய்களின் தொழிற்பாடாகும்.
(4) கருப்பையில் முளைய உட்பதித்தல் நிகழும்.

19. கர்ப்பிணித் தாயொருவருக்கு வழங்கப்படவேண்டிய ஒரு வக்சீன்
(1) ஈர்ப்புவலி (2) கூகைக்கட்டு (3) ஹெபடைடிஸ் B (4) ருபெல்லா

20. கர்ப்பிணிப் பருவத்தில் ஏற்படக்கூடிய ஒரு சிக்கல்
(1) சில உணவுப்பொருள்களில் விருப்பமின்மை (2) பாதங்கள் சிறிது வீங்கிக் காணப்படல்
(3) சிறிதளவு இரத்தக்கசிவுகள் ஏற்படல் (4) அடிக்கடி சிறுநீர் கழித்தல்

21. புதிதாகப் பிறந்த குழந்தையில் காணக்கூடிய ஓர் இயல்பு **அல்லாதது**
(1) ஒரு நாளில் கூடுதலான நேரம் உறங்குதல்
(2) ஒளியுள்ள திசையை நோக்கி தலையைத் திருப்புதல்
(3) முண்டப் பகுதி, அவயங்கள் ஆகியவற்றோடு ஒப்பிடுகையில் தலை பெரிதாகக் காணப்படல்
(4) சப்தத்திற்கு திடுக்கிடுதல்

22. ஜப்பானிய என்சைபலயிடிஸ் (JE) வக்சீன் குழந்தைக்கு வழங்கப்படுவது
(1) 4 மாதம் பூர்த்தியானவுடன் (2) 6 மாதம் பூர்த்தியானவுடன்
(3) 9 மாதம் பூர்த்தியானவுடன் (4) 12 மாதம் பூர்த்தியானவுடன்

[பக். 3 ஐப் பார்க்க.

**23.** வயது 5 மாதங்களாகவுள்ள ஒரு குழந்தை பொதுவாக
(1) உதவியின்றி உட்காரும்.
(2) தலையை நேராக நிமிர்த்தி வைத்திருக்கும்.
(3) துலங்கலொன்றாக சிரிக்கத் தொடங்கும்.
(4) விளையாட்டுப் பொருள்களை ஒரு கையிலிருந்து மற்ற கைக்கு மாற்றும்.

**24.** பின்வருவனவற்றில் முதல் வருடத்தில் பிள்ளையின் மொழி விருத்திக்கு மிகவும் உதவுவது எது?
(1) பிள்ளையுடன் மழலை மொழி பேசுதல்
(2) ஒலிகளை எழுப்பும் விளையாட்டு உபகரணங்களைப் பெற்றுக்கொடுத்தல்
(3) தாலாட்டுப் பாடல்களைப் பாடுதல்
(4) சூழலில் கேட்கும் இரைச்சல்களை செவிமடுக்கச்செய்தல்

**25.** முதல் வருடத்தில் பிள்ளையின் இயக்கத்திறனை மேம்படுத்துவதற்கு மிகவும் பொருத்தமான இரு விளையாட்டுப்பொருள்கள்
(1) மென்மையான விளையாட்டுப்பொருள்களும் காற்றடைத்த பந்துகளும்
(2) பொம்மைகளும் துண்டுகளாகக் கழற்றிப் பொருத்தக்கூடிய படங்களும்
(3) பொம்மைகளும் ஒலியெழுப்பும் மிருகங்களும்
(4) துண்டுகளாகக் கழற்றிப் பொருத்தக்கூடிய படங்களும் காற்றடைத்த பந்துகளும்

**26.** முதல் வருடத்தில் பிள்ளையால் **வெளிக்காட்டப்படாத** ஒரு மனவெழுச்சி இயல்பு
(1) விரைவுத் தன்மை (2) தீவிரத் தன்மை
(3) நிலையானத் தன்மை (4) அடிக்கடி வெளிக்காட்டும் தன்மை

**27.** கட்டிளமைப்பருவ பிள்ளைகளிடம் காணக்கூடிய ஓர் அசாதாரண நடத்தை
(1) பகற்கனவு காணுதல் (2) தாழ்வுச்சிக்கலைக் கொண்டிருத்தல்
(3) வீர வணக்கம் செலுத்துதல் (4) பின்பற்றுதல்

**28.** ஒளி ஊடுகாட்டக்கூடிய ஒரு துணியின் புறப்பக்கத்தில் மீன்முள்ளுத்தையல் தைத்தல் இனங்காணப்படுவது
(1) அலங்காரத் திணிப்பு வேலை (குவில்ட்) என (2) நிழல் வேலை என
(3) எம்போசிங் என (4) அப்ளிக் வேலை என

**29.**


*A*


*B*

மேலே *A*, *B* ஆகிய வரிப்படங்களின் மூலம் காட்டப்படுவன முறையே
(1) லேசி டெய்சி தையல், அழுத்தத் தையல்(சற்றின்) (2) சங்கிலித் தையல், நரம்புத் தையல்
(3) நரம்புத் தையல், லேசி டெய்சி தையல் (4) சங்கிலித் தையல், அழுத்தத் தையல்

**30.** பொருத்தொன்றைத் தைத்து நேர்த்திசெய்யும் செயன்முறை கீழே தரப்பட்டுள்ளது.
- துணியின் இரு பகுதிகளையும் பொருத்துதல்
- பொருத்தின் ஒரு பகுதியின் அரைவாசியைக் கத்தரித்தல்
- மற்றைய பகுதியை அதன்மீது மடித்து சோம் தைத்தல்

இப்பொருத்து
(1) பிரான்சியப் பொருத்து (2) மேற்செறி பொருத்து (3) சாதாரண பொருத்து (4) தட்டைப் பொருத்து

**31.** பின்வருவனவற்றுள் சிறுநூலோடித் தைத்தலின் போது **செய்யக்கூடாதது** எது?
(1) முடிச்சொன்றை இட்டு ஆரம்பித்தல் (2) ஒரே நீளங்களையுடைய தையல்களை இடுதல்
(3) வலப்பக்கத்திலிருந்து இடப்பக்கமாகத் தைத்தல் (4) மூன்று விசுப்பத்தையல்களுடன் நிறைவுசெய்தல்

**32.** பின்வருவனவற்றுள் தழுவணை உறையைத் தைத்து நேர்த்தி செய்தலுடன் தொடர்பான சரியான விடயம் எது?
(1) திறப்பின் இரு பக்கங்களிலும் விடுவெளிகளை சமமாக இடுதல்
(2) அணையிடல் அவசியமாதல்
(3) எளிய தையல் முறைகளையும் தையல் நுட்ப முறைகளையும் பயன்படுத்துதல்
(4) கரை அலங்காரத்திற்காக மேற்பரப்பின் மீது சீகுயின்ஸ் பிடித்தல்

[பக். 4 ஐப் பார்க்க.


Department of Examinations Sri Lanka

13836

**33.** டெரிலின் ஒரு
(1) தொகுப்பு பொலிமைட் நார் ஆகும். (2) பாதித் தொகுப்பு நார் ஆகும்.
(3) அக்ரிலிக் நார் ஆகும். (4) தொகுப்பு பொலியஸ்ரர் நார் ஆகும்.

**34.** பின்வருவனவற்றுள் குழந்தை சட்டையின் அடிப்படை மாதிரியுருவை அமைப்பதற்கு மாணவர்களால் பெறப்பட்ட அளவீடுகளுள் சரியான அளவீடு எது?
(1) கழுத்து ஆழத்திலிருந்து 7 செ.மீ கீழாக முன்பக்க இரண்டாம் குறுக்களவு
(2) கழுத்து ஆழத்திலிருந்து 4 செ.மீ கீழாக பின்பக்க இரண்டாம் குறுக்களவு
(3) கழுத்து ஆழத்திலிருந்து 7 செ.மீ கீழாக பின்பக்க இரண்டாம் குறுக்களவு
(4) கழுத்து ஆழத்திலிருந்து 2 செ.மீ கீழாக முன்பக்க இரண்டாம் குறுக்களவு

**35.** பிள்ளைக்கான சட்டையைத் தைக்கும்போது மாணவர்களால் பின்பற்றப்படும் சில படிமுறைகள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியான படிமுறை எது?
(1) கைவிளிம்பைத் தைத்த பின்னர் கை உட்பக்கத்தைப் பொருத்துதல்
(2) பாவாடையின் பக்கப்பொருத்துகளைத் தைத்து பின்னர் இடுப்பைச் சுருக்குதல்
(3) பக்கப் பொருத்துகளுக்காக திறந்த தட்டைப் பொருத்தை இடுதல்
(4) பிற்பக்க திறப்பை இணைப்பியிடுவதற்கு கொளுக்கிகளையும் கண்களையும் பிடித்தல்

**36.** கருக்குடும்பத்தில்
(1) தயாள குணம் அதிகமாகும். (2) அந்தரங்கத்தன்மை அதிகமாகும்.
(3) சுயநலமற்ற தன்மை அதிகமாகும். (4) பாதுகாப்புத் தன்மை அதிகமாகும்.

**37.** மனைகளை நிர்மாணிக்கும்போது யன்னல்களுக்காக ஒதுக்கப்பட வேண்டிய அளவு அறைகளின் பரப்பளவின்
(1) 1/4 ஆகும். (2) 1/6 ஆகும். (3) 1/7 ஆகும். (4) 1/15 ஆகும்.

**38.** நிர்மாணமொன்றில் சரிவுக் கோடுகளால் வெளிக்காட்டப்படும் இயல்பு
(1) கம்பீரத் தன்மை (2) இசைவுத் தன்மை (3) அசைவற்றத் தன்மை (4) செயற்திறன்

**39.** நடுநிலை வர்ணம்
(1) எந்தவொரு வர்ணத்தினதும் பெறுமானத்தைக் கூட்டும்.
(2) அறையை விசாலமானதாகக் காட்டும்.
(3) நிற இசைவுக்குப் பயன்படுத்தப்படலாம்.
(4) வெள்ளை, கறுப்பு, இளஞ்சிவப்பு, ஊதா ஆகிய வர்ணங்களாகும்.

**40.** பின்வருவனவற்றுள் மனை வரவுசெலவுத் திட்டம் தொடர்பான சரியானக் கூற்று யாது?
(1) செலவினத் தலைப்புகள் குடும்பத்துக்கு குடும்பம் வேறுபடும்.
(2) பொழுதுபோக்கிற்கான செலவினத் தலைப்பு அத்தியாவசிய செலவினங்களுக்குக் கீழ் கொண்டுவரப்படும்.
(3) தேறிய வருமானமாக பொருள்களும் சேவைகளும் கருதப்படமுடியும்.
(4) வருமானம் அதிகரிக்கும் போது சேமிப்புக்காக தலைப்பொன்று இடப்படும்.

* *

[பக். 5 ஐப் பார்க்க.

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

85 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

| | |
|---|---|
| ගෘහ ආර්ථික විද්‍යාව | I, II |
| மனைப் பொருளியல் | I, II |
| Home Economics | I, II |

## மனைப் பொருளியல் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் நிகழ்வை வாசித்து தரப்பட்டுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடைகளை எழுதுக.

திரு. பிரகாஷ் அவர்களின் குடும்பம் மூன்று அங்கத்தவர்களைக் கொண்டுள்ளது. முன்பிள்ளைப் பருவத்திலிருக்கும் ஒரு மகளும் இக்குடும்பத்தில் இருப்பதோடு அவரின் மனைவி கர்ப்பிணியாக உள்ளார். திரு. பிரகாஷ் நற்காப்பு செய்யப்பட்ட உணவுகளைத் தயாரிக்கும் வியாபாரத்தைத் தனது வீட்டில் மேற்கொள்கிறார். அக்குடும்பம் வரையறுக்கப்பட்ட இடவசதியைக் கொண்ட மனையில் வசிக்கின்றது. மனைவி கணவரின் வியாபாரத்துக்கு உதவுவதோடு குடும்ப தேவைகளிலும் கவனமெடுக்கிறார். இக்குடும்பம் சிறந்த உடனலத்துடன் இருக்கின்றது.

(i) இக்குடும்பத்திற்கான நாளாந்த உணவு வேளைகளைத் திட்டமிடும்போது கவனத்திற் கொள்ளவேண்டிய விடயங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(ii) முன்பிள்ளைப் பருவத்தில் இருக்கும் மகளுக்காக உணவு வேளைகளைத் தயாரிக்கும்போதும் பரிமாறும்போதும் பின்பற்றவேண்டிய விடயங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(iii) உணவு நற்காப்பு முக்கியத்துவம் பெறுவதற்கு ஏதுவான காரணிகள் **இரண்டை** எழுதுக.

(iv) நற்காப்புச் செய்யப்பட்ட உணவுகளின் தரப்பண்புளை பாதுகாத்துக் கொள்வதற்கு பொதியிடலின்போது பின்பற்ற வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(v) மகளுக்காக ஆடைகளை வடிவமைக்கும்போது பின்பற்றவேண்டிய **இரு** விடயங்களைக் குறிப்பிடுக.

(vi) பிறக்கவுள்ள குழந்தைக்கு ஆடைகளை நிர்மாணிப்பதற்காக துணிகளைத் தெரிவுசெய்யும்போது கருத்திற்கொள்ள வேண்டிய விடயங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(vii) இக்குடும்பத்தின் மனித வளங்களைக் குறிப்பிடுக.

(viii) இம்மனையில் வைக்கக்கூடிய, 'இடங்களை மீதப்படுத்தும் பல்தொழிற்பாட்டுத் தளபாடங்கள்' **நான்கைப்** பெயரிடுக.

(ix) கர்ப்பிணித் தாயினால் பின்பற்றப்பட வேண்டிய சுகாதார பழக்கவழக்கங்கள் **நான்கை** எழுதுக.

(x) கர்ப்பிணித் தாயின் சிறந்த போசணை நிலைமையைப் பேணுவதற்கு தாய்சேய் பிணியாய் நிலையத்தில் வழங்கப்படும் பொருட்கள் **இரண்டினைப்** பெயரிடுக.

**2.** ஆடைகளைத் தைப்பதற்கு முன்னர் சில துணிகளை முன்செப்பனிடல் வேண்டும்.

(i) (a) துணிகளை முன்செப்பமிடல் என்பதால் கருதப்படுவது யாது?

(b) முன்செப்பமிடல் முறைகள் **இரண்டினை** விளக்குக.

(ii) முன்பிள்ளைப் பருவ பிள்ளைக்கான ஒரு சட்டையை தைப்பதற்கு எடுக்கப்பட்ட சில அளவீடுகள் கீழே தரப்பட்டுள்ளன.

- மார்புச் சுற்றளவு - 60 செ.மீ
- இடுப்புச் சுற்றளவு - 55 செ.மீ
- தோளில் இருந்து இடுப்பு வரை உயரம் - 27 செ.மீ

[பக். 6 ஐப் பார்க்க.

இவ் அளவீடுகளைப் பயன்படுத்தி பிள்ளைக்கான சட்டையின் அடிப்படை மாதிரியுருவை அமைப்பதற்குத் தேவையான பின்வரும் அளவீடுகளைக் கணிக்க.

(a) மார்பின் முன்பக்க அளவீடு

(b) இடுப்பின் பின்பக்க அளவீடு

(c) கைக்குழைச்சடி அளவீடு

(iii) பெருநூலோடித் தையல், சோம் தையல் ஆகியன ஆடைகளைத் தைக்கும்போது பயன்படுத்தப்படும் அடிப்படை தையல் முறைகள் இரண்டு ஆகும்.

இந்த தையல் முறைகள் இரண்டையும் எவ்வாறு தைத்து நேர்த்தியாக்கலாம் என விளக்குக.

**3.** (i) இனங்காண்க.

(a) அடிப்படை அனுசேப வீதம் (BMR)

(b) உடற் திணிவுச் சுட்டி (BMI)

(ii) வயோதிப பருவத்திலுள்ள ஒருவருக்கு பொருத்தமான இரவு உணவு வேளைக்கான உணவுப்பட்டியலொன்றைத் திட்டமிடுக. இதில் அடங்கியுள்ள ஒவ்வொரு உணவையும் தெரிவு செய்தமைக்கான காரணங்களைத் தருக.

(iii) வீட்டுக்கு வருகைத் தந்துள்ள பத்து விருந்தினர்களுக்கு இரவு உணவு வேளைக்கான மேசையை ஒழுங்குபடுத்தும் முறையை பருட்டான படமொன்றின் மூலம் முன்வைக்க.

**4.** (i) தயார்செய்த உணவுகளின் தரப்பண்புகளை பேணுவதற்கு விற்பனையாளரால் பின்பற்றப்பட வேண்டிய நடைமுறைகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(ii) (a) வெப்பம் இடமாற்றப்படும் முறைகளைக் குறிப்பிடுக.

(b) ஓர் உணவு வகையைக் குறிப்பிட்டு அதனைச் சமைப்பதற்குப் பயன்படுத்தப்படும் பிரதானமான வெப்ப இடமாற்றல் முறையை விளக்குக.

(iii) (a) மீன் புளித்தீயல் தயாரிப்பின்போது பயன்படுத்தப்படும் நற்காப்புப் பதார்த்தங்களைக் குறிப்பிடுக.

(b) மீன்புளித்தீயல் தயாரிப்புச் செயன்முறையுடன் தொடர்புபட்ட படிமுறைகளை ஒழுங்குமுறையாக எழுதுக.

**5.** (i) மனைத் திட்டமிடல் கோட்பாடான 'தொகுதிப்படுத்தல்' என்பதை இனங்காண்க.

(ii) 'சமநிலை' என்பது ஒரு வடிவமைப்புக் கோட்பாடாகும். அறையினுள் முறையான சமநிலையை (சமச்சீரமைச் சமநிலை) காட்டக்கூடிய விதத்தை வரைபடமொன்றின் மூலம் காட்டுக.

(iii) தனி நிற இசைவைப் பயன்படுத்தி வரவேற்பறையை அலங்கரிக்கும் விதத்தை விளக்குக.

**6.** (i) பெண் இனப்பெருக்க ஓமோன்களைப் பெயரிட்டு அவற்றின் தொழிற்பாடுகளைக் குறிப்பிடுக.

(ii) முற்பிரசவ விருத்திப்பருவங்கள் மூன்றையும் விளக்குக.

(iii) குமட்டலும் வாந்தியும் கர்ப்ப காலத்தில் காணக்கூடிய குணங்குறியாகும். இதற்கான காரணங்களைக் குறிப்பிட்டு, இந்நிலைமையை இழிவளவாக்குவதற்கு எடுக்கக்கூடிய படிமுறைகளைத் தருக.

**7.** (i) பரம்பரையும் சூழலும் பிள்ளைகளின் விருத்தியில் தாக்கம் செலுத்தும் **இரண்டு** காரணிகளாகும்.

(a) பரம்பரை

(b) சூழல்

ஆகியவற்றை இனங்காண்க.

(ii) கட்டிளமைப் பருவ பிள்ளைகளின் உடல் வளர்ச்சியை எடுத்துக்காட்டும் இயல்புகள் **நான்கினை** விளக்குக.

(iii) 'கட்டிளமைப் பருவத்தினர் சமூகமயமாவதற்கு விருப்பைக் காட்டுவர்.' உதாரணங்கள் தந்து ஆராய்க.

* * *